முஅப்துல் சமது (Ed.), ஆய்வுக் கோவை - இஸ்லாமியத் தமிழ் இலக்கிய 2ம் மாநில மாநாடு, இஸ்லாமிய இலக்கியக் கழகம், சென்னை, 2009, ப.451-462.

# ஹகிம் உமர் கய்யாமின் பாடல்கள் – பரிபாசையும் அறிதலும்

**கோ.வே. ராமகிருஷ்ண ராவ்**
**ஆய்வாளர்,**
**சென்னை.**

**எ**ட்வர்டு ஃபிட்ஸ்ஜெரால்ட் என்பவரின் உமர் கய்யாமின் ருபையத் பாடல்கள் வெளிவந்ததும் ஆங்கில மொழி அறிந்தவர்களிடையே 19 மற்றும் 20 நூற்றாண்டுகளில் அது ஒரு பெரிய வசீகர பாதிப்பை ஏற்படுத்தியது. இருப்பினும் அத்தகைய ஆங்கில மனங்கள் மதுவும், மாதுவும் என்ற நிலையில் மூழ்கி அப்பாடல்களை ரசித்ததை, இப்பாடல்களுக்கு வரைந்த ஓவியங்களே எடுத்துக்காட்டுகின்றன.[1] ருபையத் என்கின்ற அந்த நான்கு வரி பாடல்களை அவ்வாறு மெலெழுந்தவாரியாகப் படித்தால், அத்தகைய பொருளும்- மனப்பாங்கும் அதற்கேற்ற பிரதிபலிப்புகளும் தான் உருவாகும். ஆனால், உண்மையில் உமர் கய்யாமின் ருபையத் காதலை, காமத்தை, மது மயக்கத்துடன் வெளிப்படுத்துகின்றனவா என்பது தான் கேள்வி. அவற்றில் பொதிந்துள்ள உண்மைகள், மறைந்துள்ள நிதர்சனங்கள், அத்தகைய வார்த்தைகளின் மர்மத்தை, பரிபாசைகளின் ரகசியத்தை உடைக்கும்போதுதான் வெளிப்படும். மேற்கத்தைய மனங்கள் அவ்வாறு செல்லாததால், அவர்களது விளக்கங்கள் அந்நிலையிலிருந்து மாறவில்லை, உயரவில்லை. எட்வர்ட். பி. கோவெல் என்பவர் ஆகையால்தான் தான், உமரை ஒரு வழிகாட்டியாகக் கொள்ளமுடியாது, மாறாக தான் நிஷப்பூருக்குச் செல்வதைவிட நகரத்திற்கு செல்ல விரும்புவதாகக் குறிப்பிட்டார்! ஆகவே, இங்கு அத்தகைய மனச்சிறைகளில் இருந்து விடுபட்டு, ஒரு தத்துவ, மெய்ஞான, மனோதத்துவ ரீதியிலான விளக்கம் காணமுயற்சி செய்யப்படுகிறது.

**உமர்கய்யாம்**

உமர்கய்யாமைப் பற்றிய விவரங்கள் ஒருபுறம் மர்ம-மாய அமானுஷ்யங்களிலும், மறுபுறம் அதற்கு எதிர்மாறாக அதிக அளவில் போற்றுவதிலும், புகழ்வதிலும் அடைபட்டுக் கிடக்கின்றன. அவர் ஒரு வானியல் வல்லுனர், கணித மேதை, தத்துவ ஞானி, சூஃபி மெய்ஞானி என்றெல்லாம் புகழப்படுகிறார். அவர் பல்கலை வல்லுனராக இருந்தபோதும், சமகாலத்தைய மக்கள் அவரை ஏன் கண்டுகொள்ளவில்லை என்பது புதிராக உள்ளது. உமர் அல்லது உமர் பின் கய்யாம் என்பவர் இருந்த காலம், பிறந்த இடம், அவரை பற்றிய விவரங்கள், அவரது நூல்கள் ஆகியவற்றைப் பலவாறாக, பல வல்லுனர்கள் வித்தியாசமாக எடுத்துக்காட்டுகிறார்கள். பல இடங்களில் கிடைத்த ஆவணங்கள் அவரால் எழுதப்பட்டனவா அல்லது அவர்தாம் அவற்றின்

ஆசிரியர் என்று சொல்லப்பட்டாலும், அவை வித்தியாசமான நான்குவரி பாடல்களைக் கொண்டதுடன், அவை பலதரப்பட்ட கலைகளைப் பற்றியதாக இருப்பதால், வேறு பலர் எழுதியிருப்பார்களா என்று, அவற்றின் உண்மை நிலைப் பற்றி சந்தேகம் எழுந்துள்ளது.

''உமர் கய்யாம் நிஷாப்புரியைச் சேர்ந்தவர் மற்றும் அங்கு பிறந்தவர். பலதரப்பட்ட தத்துவ-ஞான பிரிவுகளைப் பொறுத்த வரையிலும், அவர் அபு அலி (அவிசென்னா) அவர்களுக்கு அடுத்தபடியாக வருகிறார்'' (மொஹம்மது ஷார்லே அிபின் நுஸெத்-உல்-அர்வா என்ற நூலிலிருந்து; இதுதான் மிகவும் பழையக் குறிப்பு)

''உமர் அல்-கய்யாம், கோரஸானின் இமாம் ஆவார், அக்காலத்தில் மிகவும் படித்தவர், கிரேக்கர்களின் விஞ்ஞானத்தை அறிந்தவர்'' (இபின்-அல்-கிஃப்டி என்பவரின் மேதைகளின் வரலாறு என்ற நூலிலிருந்து).

''நிஷாப்பூரின் மிகவும் படித்தவர்களுள் ஒருவர் உமர் கய்யாம். அவர் பல தத்துவ-ஞானப் பிரிவுகளில், குறிப்பாக கணிதத்தில் வல்லுனராக இருந்தார்'' (ஜக்கரியா கஸ்வினி)

''கய்யாம் (எ) ஓமர், இப்ராஹிம் கய்யாமின் மைந்தர். அவர்-காலத்தைய விஞ்ஞானங் களில், குறிப்பாக வானவியலில், மற்றவர்களைவிட தலைசிறந்து விளங்கினார். உலக பிரசித்திப் பெற்ற மற்றும் ஒப்புஉவமையற்ற பல நூல்களின் ஆசிரியர் ஆவார்'' (சிறிதே அறியப்படும் ஒரு சரித்திர நூலிலிருந்து).

''உமர் கய்யாம், கொரஸானின் படித்த மனிதர்களுள் சிறந்த அறிவாளி. தத்துவத்தில் அவர் அவிசென்னாவிற்கு இணையாக வைக்கப்படுகிறார். ஃபஸில் மொஹம்மதுவின் சரித்திரத்திலிருந்து அறிவதாவது, அவர் (உமர்) நிஷாப்புரியில் பிறந்தார் என்பதாகும் மற்றும் அவருடையே முன்னோர்களும் நிஷாப்புரியைச் சேர்ந்தவர்களே. சிலர் அவர் பாக் பகுதியைச் சார்ந்த ஸம்ஸத் என்ற கிராமத்திலிருந்து வந்ததாகவும், அஸ்தரபாத் பகுதியைச் சேர்ந்த பஸாங்க் என்ற கிராமத்தில் பிறந்ததாகவும் கூறுகின்றனர்.''

உமர் கய்யாம் ஒரு சுதந்திர சிந்தனையாளராகச் சித்தரிக்கப்படுகின்றார், அதனால் நம்பிக்கைக்கு எதிராக இருப்பதாகக் கருதப்படுகிறது; நாத்திகன் மற்றும் இகவாழ்க்கை விரும்பி; பல கடவுள் நம்பிக்கையுள்ளவர் மற்றும் மெய்ஞானத்தில் நம்பிக்கையில்லாதார்; ஒரு ஆசாரமான முஸல்மான்; உண்மையான தத்துவவாதி, உன்னிப்பாகக் கவனிக்கக் கூடியவர், படித்தவர், சிறந்த அறிவாளி மற்றும் பொருட்மறுப்புவாதி, போலித்தனம் மிக்கவர், அவதூறு செய்பவர் என எதிர்-புதிராகவும் சித்தரிக்கப்படுகிறார். அதுபோலவே அவரது கவிதைகளும் பல விஷயங்களைப் பற்றியதாக உள்ளது.

ஹாம்ஸ்வொர்த் என்ஸைலோபிடியா[3] கூறுவதாவது, ''அந்த கவிதைகள் எல்லாம் தனித்தனியாகவும், காதல் போன்ற நிலையிலிருந்து சமாதி நிலை விவாதத்தையும் கொண்டு, விதிப்படி நடக்கும் என்ற நிலையிலிருந்து மதுசாலை பாடல்களையும் கொண்டுள்ளன. அவை பாரசீக மெய்ஞான வளர்ச்சியில் முக்கியமாக உள்ளன.''

இங்கு நிஷாப்பூர், நிஷாப்புரி, பஸாங்க், அஸ்தரபாத் முதலிய பெயர்கள் இந்தியாவின்று பெறப்பட்டது என்பதனைக் காட்டுகிறது. அவரால் இயற்றப்பட்டது என்ற அந்த நான்கு வரி பாடல்களின் எண்ணிக்கை 45 முதல் 1200 வரை உள்ளன. ஆகையால், அந்தப் பாடல்களை மிகவும் கவனமாகப் படிக்க வேண்டியுள்ளது.

**உமர் கய்யாமும், இந்தியாவும்**

உமர் கய்யாமின் இந்தியாவின் மீதான தாக்கமும் நோக்கத்தக்கது. ஏனெனில், அவரது பாடல்கள் இந்திய மொழிகள் அனைத்திலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அதே மாதிரி, இந்திய கவிஞர்கள் மற்றும் கவிகளில் இவரின் பெயர் பிரபலமாக உள்ளது.

எட்வர்டு ஃபிட்ஸ்ஜெரால்ட் தனது எட்வர்ட். பி. கோவெல் என்பாருக்கு எழுதும் கடிதத்தில் 516 நான்குவரி பாடல்கள் கொண்ட உமர் கய்யாமின் பிரதியைக் கண்டெடுத்ததாகக் குறிப்பிடுகின்றார். கல்கத்தாவின் 'உமர் கய்யாமின் பாடல்' பிரதி மிகவும் பிரசித்தி பெற்றது. ஏனெனில், அது 1836லேயே பதிப்பிக்கப்பட்டதாகும்.

ஸ்வாமி கோவிந்த தீர்த்த என்ற இந்தியப் பண்டிதரின்படி உமர் கய்யாம் 1048ல் பிறந்து 1132ல் இறந்ததாகத் தெரிகிறது. கல்கத்தாவில் கிடைத்த தராக்-இ-கடமா என்ற ஆவணத்தின்படி இவரது இறப்பின் ஆண்டு 1223 என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

ஜான் பேயின், ''உமர் கய்யாமில் உள்ள நான்கடி பாடல்களில் மிக விளக்கமான சித்தாந்தம் உள்ளது, அவற்றின் வேர்கள், வேதங்களினின்று பெறப்படவில்லை என்றாகிலும், அவற்றுடன் உள்ள ஒற்றுமையை மறுக்கமுடியாது'' என்று எடுத்துக்காட்டியதை ஜோஸப் ஜேப் குறிப்பிடுகின்றார். உமர் கய்யாம் காலத்தில் பாரசீகத்தில் வேதங்களை ஏற்றுக் கொண்ட முறை இருந்ததில்லை அல்லது அங்கு அறியப்பட்டிருந்தது என்பதற்கான ஆதாரம் இல்லை. இருப்பினும் இரண்டிற்கும் உள்ள பல ஒற்றுமைகள், குறிப்பாக உலகத்தின் நிலையற்றத் தன்மை முதலியன வெவ்வேறான இடங்களிலுள்ள மனித சிந்தனைகளின் ஒற்றுமையைக் காணலாம். தத்துவம், பேரண்டவியல் முதலியவற்றில் உள்ள ஒப்புமையைத் தவிர்க்கமுடியாது.

11-12ம் நூற்றாண்டுகளில் ஈரானிய வல்லுனர்கள் மற்றவர்கள் இந்தியாவிற்கு அடிக்கடி வந்துள்ளதற்கு பல அத்தாட்சிகள் உள்ளன. மொஹம்மது கஜினி 1001 முதல் 1027 வரை கங்கை சமவெளி வரை வந்து திரும்பச் செல்லும்போது பல இந்திய வல்லுனர்கள், கலையாட்கள், முதலியோரைப் பிடித்துச் சென்றுள்ளார். அல்-பிருனி என்பவர் 1017 முதல் 1030 வரை 13 ஆண்டுகள் இந்திய கலைகள் மற்றும் விஞ்ஞானங்களின் விவரங்களை சேகரித்துக் கொள்ள இந்தியாவில் இருந்துள்ளார். அதேமாதிரி அல்-ஷாரஸ்தானி (1076-1153) என்பவரும் தனது 'கிதாப் அல்-மிலால் வன் நிஹால்' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். புஷுர்க்-பின்-ஷாரியார் என்ற பாரஸிகக் கடல் கப்பல் தலைவன் 950ல் 'இந்தியாவின் அதிசயங்கள்' (The Marvels of India) புத்தகத்தில் தனது எண்ணங்களை அரேபிய மொழியில் குறித்துள்ளான். வட இந்தியாவை ஆண்ட கோரி, கில்ஜி, துக்ளக், முகலாயர்கள் பாரஸிக இலக்கியத்தைப் போற்றுபவர்களாக இருந்தனர். ஆகையால், பல பாரஸிக புலவர்கள், கவிஞர்கள் அவர்களது தர்பார்களுக்கு வந்து சென்றவாறு இருந்தனர். ஹாவிஸ் என்ற புலவரும் இந்தியாவிற்கு அழைக்கப்பட்டார். ஆனால், கடற்சீற்றங்களுக்கு பயந்து கொண்டு அவர் வரவில்லை.

சார்லஸ் எல்லியட், ஈ.ஜி. பிரௌன், டி.ஜே. போயர் முதலியோர் மத்தியத் தரைக்கடல் பகுதி (மத்திய கிழக்கு நாடுகள்) சூஃபிக்களின் மீதான இந்தியத் தாக்கத்தை எடுத்துக் காட்டியுள்ளனர். இந்தியாவிற்கு வந்திருந்த மன்ஸூர் அல்-ஹல்லஜ் என்பவர் 'அனல்-ஹக்' (நானே உண்மை அல்லது கடவுள்) என்று சொன்னதற்காக 922ல் கொலை செய்யப்பட்டார். அது வேதாந்தத்தின் கொள்கையான 'தத்வம் அஸி', அதாவது 'நீயே அது' என்பதனைப் போன்றது. இந்து சிந்தனைகள் இஸ்லாத்துடன் சேரும்போது, ''மனித மற்றும் இறையன்

பிற்கான இந்து ஒருத்துவ பலத்துவம் கலைநயம் கொண்ட அழகிய மதச் சின்னங்களையும், வடிவங்களையும் உண்டாக்கின.'' ஆகையால், உமர் கய்யாமின் மீதான இந்தியத் தாக்கம் பற்றி சொல்லுவது ஆதாரங்கள் இல்லாதத் தன்மையல்ல. இல்லையென்றால் அத்தகைய குடிமயக்கம் மற்றும் காம-மோக சின்னங்களுக்கு தகுந்த தத்துவ விளக்கங்கள் கொடுக்கமுடியாது. அவர்களது பாடல்களும் அத்தகைய கலவையைக் கொண்டிருக்காது.

## ருபையத்தில் காணப்படும் பஞ்சபூதத் தத்துவம்

இவ்வுலகத்தில் இருக்கும் உயிருள்ள மற்றும் உயிரற்ற எல்லா பொருட்களும் ஐந்து இயற்கை கூறுகளான ஆகாயம், காற்று, நெருப்பு, நீர் மற்றும் மண் என்பவற்றால் ஆனது என்ற இந்திய பஞ்சபூதத் தத்துவத்தைப் பல ருபையத் பாடல்களில் காணலாம் (62, 76, 176, 233).

சம்பந்தப்பட்ட பூதங்கள் ஜோடியாகக் குறிப்பிடப்படுகின்றன.

1. சொர்க்கத்தின் கிருபை, தண்டிப்பின் பயம்
2. ஆவி-உடல்
3. உடை-கோப்பை
4. மண்-காற்று
5. நீர்-நெருப்பு

மண், காற்று, நீர், நெருப்பு என்ற நான்கு பூதங்களையும் ஒரு பாடலில் சொல்வது, பாரஸிக கவிதைக்கே உரித்தான அழகு என்று குறிப்பிடுகின்றார் ஏ.ஜே.ஆர். பெர்ரி. ஆனால், இந்த நான்கடி கவிதைகளுள் புதைந்திருப்பது நான்கு பூதங்கள் அல்ல, ஐந்து. இஸ்லாமிய பேரண்டவியல் மற்றும் சூஃபி மெய்ஞானத்தில் உயர்நிலையில் ஐம்பூதங்களையும், கீழ்நிலையில் ஐம்பூதங்களையும் வைத்து விளக்குகின்றன. இங்கு நான்கு என்று குறிப்பிட்டது உண்மையான, இருக்கும், எங்குமிருக்கும் மற்றும் செய்யப்பட்ட என்ற நிலைகளைக் காட்டுகிறது. அவை சளி, ரத்தம், மஞ்சளான பித்தநீர் மற்றும் கருப்புப் பித்தநீர் என்பனவற்றுடன் தொடர்புப்படுத்தப்படுகின்றது.

## மண்பாண்டம், மண்பாண்டம் செய்பவன்/ குயவன் உருவகம்

பழங்கால மத இலக்கியங்களில் படைப்பவன் எப்பொழுதும் குயவனுடன் ஒப்புமைப்படுத்திக் காட்டப்பட்டுள்ளதைக் காணலாம். குயவன் நீரை மண்ணுடன் கலந்து, பிசைந்து, பிசைந்த உருவற்றப் பிண்டத்தை சக்கரத்தில் வைத்து சுழற்றி ஒரு குறிப்பிட்ட வடிவம், உருவம், அமைப்பு கொடுக்கிறான். பிறகு அதனை நெருப்பில் இட்டு சுட்டு அதற்கு உயிர் கொடுக்கிறான். ஆகவே, இங்கு ஐம்பூதங்களும் ஒன்றாக வேலை செய்கின்றன. தத்துவரீதியில் படைப்பு விளக்கப்படுகிறது.

பாருங்கள், எப்படி குயவன் தனது முரட்டுத்தனமான கைகளை
நிலையற்ற மண்ணின் மீது வைக்கிறான்
அவனுக்கு உணர்ச்சி-காரணம், கைத்திறன் இவற்றைக் கொண்டு
மண்ணிற்கு வடிவம் தருகிறான். ஆனால்,
அதற்கு முன்பு எப்படி அடிக்கிறான், குத்துகிறான், மிதிக்கிறான்
என்று அவன் நினைப்பதில்லை

இருப்பினும் அம்மண்ணிற்கு மதிப்பு - மரியாதை-அன்பு உள்ளது.
ஏனெனில், அதில் அவர்களது மூதாதையர் இருப்பதினால்!

## இறந்தபின் வாழ்க்கை

உமர் கய்யாமிற்கு இறந்தபின் உள்ள வாழ்க்கையில் நம்பிக்கை இருந்தது என்பது பாடல் 33 தெளிவாக எடுத்துக்காட்டுகிறது.

இறக்கும் நேரத்தைக் குறித்து யோசித்து கவலைப்படுபவன், பயப்படுபவன் நான் இல்லை
நான் துன்பப்படுவதைவிட பாதிக்கு மேலான எனது இன்ப வாழ்க்கை
எனது இதயத்தை நிறைத்துள்ளது
எனக்கு நன்றாகவே தெரியும். மண்ணிலிருக்கும் ஆத்மா ஆண்டவனால்
எனக்குக் கடனாகக் கொடுக்கப்பட்டுள்ளது.
ஆகையால் நேரம் வரும்போது, என்னால் ஏற்றுக் கொள்ளமுடியாததை ஏற்றுக் கொள்வேன்.

## நிலையற்ற மனித வாழ்க்கை, உலகம் முதலியன

நீர்மேல் குமிழி போன்ற நிலையற்ற மனிதவாழ்க்கை மற்றும் இயற்கை முதலியவைப் பற்றிய விவரங்கள் பல பாடல்களில் (3, 117, 157, 1282, 190, 199, 251) காணப்படுகின்றன. மண்ணிலே மண்மூலமாகத் தோன்றிய மனிதன் மண்ணிற்கே திரும்ப செல்லவேண்டும் என்ற சித்தாந்தம் உமர் கய்யாமின் மனத்தில் ஆழப்படிந்து கிடப்பதைக் காணலாம். அவர் பல இடங்களில் இந்த உண்மையினை உணர்ந்து, இறைவனைப் பின்பற்ற வேண்டும் எனப் பணிக்கிறார்.

பழங்காலங்களில் இருந்தவர்கள் வந்தார்கள், இன்று வாழ்பவர்கள் பிற்காலத்திலும் வாழக்கூடும்.
ஆனால், அவர்களும் தமது பிரயாணத்தை முடித்துகொண்டு,
அடுத்தடுத்து சென்று சேரவேண்டியதுதான்
இந்த உலக அரசாங்கமும் ஆகாயமும் நிலையாக யாருக்காகவும் இருக்காது
எப்படி மற்றவர்கள் சென்றடைந்தனரோ அதே மாதிரி நாமும்
ஒருவர் ஒருவராகச் செல்ல வேண்டியதுதான்.

252ம் பாடலில், அவர் இந்த உலகத்திற்கு இரண்டு கதவுகள் இருப்பதாகக் குறிப்பிடுகின்றார். ஒன்று உள்ளே வருவதற்கு மற்றொன்று வெளியே செல்வதற்கு. உண்மையான சமாதானம் மற்றும் மகிழ்ச்சி விரும்பும் எந்த மனிதனும் தனது தாயின் கர்ப்பத்திலிருந்து வெளிவந்ததில்லை, வெளிவர விரும்பியதில்லை. அதாவது பிறப்பறுக்கும் மனிதன் பிறப்பதை விரும்புவதில்லை. பிறக்காமல் அத்தகைய உண்மையான சமாதானம் மற்றும் மகிழ்ச்சியை அறியவும் முடியாது. ஆகவே, ஒரு தடவை பிறந்து அறிந்த பிறகு, மறுபடியும் பிறக்க ஆசைக் கொள்ளமாட்டான். ஏனெனில், பிறப்பதே இறப்பதற்காகத்தான் எனும்போது, இறக்காமல் இருக்க பிறக்காமல் இருக்கவேண்டியதுதன்! அவ்வாறு பிறப்பறுக்க வேண்டுமானால், ஆண்டவனுடைய அனுகிரகம் வேண்டும்.

## இந்திய தொடர்பு

உமர் கய்யாம் 'அழிவற்ற ஊற்று' (39, 187) மற்றும் 'அழிவற்ற நீரோடை' (44) என்று சொல்லியிருக்கிறார். ஏ.ஜே. ஆர்பெரி அந்த 'அழிவற்ற ஊற்று' என்பதாவது, உலகத்தின்

முடிவில் உள்ள ஒரு நதி என்றும், இந்தியாவை வென்றபிறகு, அலெக்சாந்தர், தனது மெய்ஞான குருவுடன் அந்த நதிக்குச் செல்லவிரும்பியதாகவும் குறிப்பிடுகின்றார். அந்த குருவானவர், அலெக்சாந்தரால் வலுக்கட்டாயமாகப் பிடித்துச் செல்லப்பட்ட ஒரு இந்தியத் துறவியே ஆவார்.

பூமிக்கு மேலே ஏழு ஆகாயங்கள் உள்ளன என்ற குறிப்பும், இந்திய புராணங்களில் உள்ள பூமிக்கு மேலே ஏழு உலகங்கள், கீழே ஏழு உலகங்கள் என்பதனுடன் ஒப்பிடப்படுகிறது. பெஹ்லெவி அல்லது பஹ்லவி என்பது பழங்கால பாரஸிக வீர-தீர சமஸ்கிருத மொழியாகும். இது ஆறாவது பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

பழங்கால இந்தியர்கள் மற்றும் ஈரானியர்களின் ரிக்வேதம் மற்றும் ஜெந்ட்-அவஸ்தா இரண்டும் ஒரே மூலத்தைக் கொண்டுள்ளது என்பதனால், அத்தகைய கலாச்சார ரீதியிலான எண்ணங்கள் தொடர்ந்து வந்து, மக்களின் மனங்களில் பதிந்திருப்பதை மறைக்க முடியாது.

### உமர் கய்யாம் ஒரு மெய்ஞானியா, சாருவாகரா, சூஃபியா, சுதந்திர சிந்தனையாளரா?

உமர் கய்யாம், சிந்தனைகள், தத்துவக் கொள்கைகள் முதலியவற்றைக் கொண்டு பலவாறாகச் சித்தரிக்கப்பட்டுள்ளார்.

★ ஹெப்லோட் என்பவர் உமர் கய்யாம் ஒரு முனிவர்/ துறவி, மெய்ஞானி, சூஃபி என்கிறார்.
★ சிலர் அவர் ஒரு 'சுதந்திர சிந்தனையாளர்' என்று குறிப்பிடுகின்றனர்.
★ ஈ.பி. கோவெல் உமர் கய்யாமில் பாடல்கள் ஆழ்ந்த பொருளைக் கொண்டுள்ளது என்கிறார். அவர் இந்தியாவில் பல முன்சீப்புகளுடன் உரையாடியபோது, அப்பாடல்கள் எல்லாம் உருவகங்களைக் கொண்டுள்ளன என்றனர். குடிக்கும் தன்மையினை, மதுபோதையை 'தெய்வீக பக்தி' என கொள்ளவேண்டும் என்றனர்.
★ கோவெல்லும், பலதரப்பட்ட கருத்துகளைக் கொண்டிருந்தாலும், உமர் ஒரு சூஃபியே என்றார்.

சூஃபிக்கள் கிழக்கத்தைய மெய்ஞானம் மற்றும் இஸ்லாத்திற்கு இடையில் ஒரு பாலம் அமைக்க முயன்றனர் எனத் தெரிகிறது. இறைவனின் அருளைப் பெற, இறைத்தன்மையினை அறிய, தெய்வீக-மெய்ஞானக் கருத்துகள், சிந்தனைகளை அறிந்து தெளிய பல அகவுருவ மற்றும் வெளியுருவ சினனங்களை தகவமைத்துக் கொண்டு உபயோகித்தனர். ஆசார குருமார்கள் அவற்றை ஏற்றுக்கொள்ளாவிடினும், சூஃபிக்கள், கணிதமேதைகள், பாடகர்கள், அழகிய கையெழுத்தாளர்கள், கட்டிடக் கலை வல்லுனர்கள் அத்தகைய மெய்ஞான எண்ணங்களுக்கு உருகொடுத்து உபயோகப்படுத்துகின்றனர். அத்தகைய முறையில், உமர் கய்யாம் தனது நான்கடி பாடல்களில் உபயோகப்படுத்திய உருவகங்கள் இறைவனை அறிய மேற்கொண்ட முயற்சிகள் தாம். அவை இறைவனுக்கோ, மதத்திற்கோ, நம்பிக்கைகளுக்கோ எதிரானவை இல்லை என்கின்றனர் ஆராய்ச்சியாளர்கள்.

அவர் ஜொராஸ்டிரியர், முஸ்லிம் மற்றும் கிருத்துவர்களைக் குறிப்பிட்டுள்ளார். சூஃபித்துவத்தை குறை சொல்லாமல், அளவிற்கு மீறி குடித்தவனை, கடவுள் மீது அளவிற்கு மீறிய பக்தி கொண்டவனுடன் ஒப்புமைப்படுத்துகிறார். ஏ.ஜே. ஆர்பெரி 159ம் பாடலை விமர்சிக்கும்போது, ''இறையியலும் கணிதமும் சேர்ந்து இந்த விஷயத்தில் சிறிது வேடிக்கை

செய்யலாம். ஆனால், நிச்சயமாக ஒருத்துவத்தை துவைதத்துடன் சேர்ந்து குழப்ப மாட்டார்''. சூஃபிக்களின் உலகத்திலே, ஆண்டவன் பல உருவங்களில் இருப்பதாகவே பாவிக்கின்றனர். ஆனால், கடவுளின் ஒருத்துவம் அவர்களுக்கு நன்றாகவேத் தெரியும். ஆகவே, உமர் கய்யாமின் பாடல்களில் வரும் மது, கோப்பை, குடித்தல் முதலிய வார்த்தைகளுக்குப் பதிலாக பக்தி, உருவம், கடவுளின் மீதான எல்லையற்ற காதல் என்று பொருள் கொண்டால் எல்லா குழப்பங்களும் விலகும். ஒரு புதிய விளக்கம் பிறக்கும்.

ஓ.பி.எஸ். சௌபே உமர் கய்யாமின் சிந்தனைகளை எபிக்யூரின் மற்றும் சாருவாக சிந்தனைகளுடன் ஒப்பிடுகிறார். இவ்விரு குழுக்களும் இந்த உலகத்தில் உள்ள பொருட்களைத் தவிர, வேறெந்த தத்துவத்தையும் ஏற்றுக்கொள்வதில்லை. ஆகவே, தமது விளக்கங்களில் அத்தகைய முடிவிற்கு வருகிறார்.

உமர் கய்யாமை ஒரு நம்பிக்கையற்றவர், நாத்திகவாதி, சூன்யவாதி, சாருவாக கொள்கையினர், எபிகியூரியர் என்று பலவாறாக எண்ணச் செய்கின்றன. ஆனால், அவை தனித்தனியாக படித்து பொருள் கொள்வதைவிட, மற்ற பாடல்களுடன் இணைத்து பொருள் கொண்டால், அவர் அத்தகையவர் அல்லர் என்பது நன்றாக விளங்கும்.

## உமர் கய்யாம் ஒருத்துவவாதியா? இல்லை இருத்துவவாதியா?

முன்பே குறிப்பிட்டபடி, ஏ.ஜே. ஆர்பெரி 159ம் பாடலை விமர்சிக்கும்போது, "இறையியலும் கணிதமும் சேர்ந்து இந்த விஷயத்தில் சிறிது வேடிக்கை செய்யலாம். ஆனால், நிச்சயமாக ஒருத்துவத்தை துவைதத்துடன் சேர்ந்து குழப்பமாட்டார்''. சூஃபிக்களின் உலகத்திலே, ஆண்டவன் பல உருவங்களில் இருப்பதாகவே பாவிக்கின்றனர். ஆனால், கடவுளின் ஒருத்துவம் அவர்களுக்கு நன்றாகவே தெரியும். கடவுளின் சர்வ-சக்தி, சர்வ-வியாபி, சர்வ-ஞானி தத்துவங்கள் ஒருத்துவத்தை நீர்க்காது. ஆனால், இத்தகைய தத்துவத்தைப் படிப்பவர், ஒருவேளை அவர் இருத்துவத்தை அல்லது அத்வைத கருத்தைக் கொண்டுள்ளாரோ என்று நினைக்கத் தோன்றும்.

வாழ்க்கையென்ற நூலில் பணிவு என்ற முத்துகளைத் தொடுக்க நான் என்றும் முயன்றதில்லை
அன்புள்ள ஆண்டவரே எனது தலையிலிருக்கும் பாவத்துடன் நான் என்றும் அழுததில்லை
இருப்பினும் முட்கள் நிறைந்த உன்னுடைய தயவைப் பெற கஷ்டப்படுவதில்லை
எந்த நேரத்திலும், இடத்திலும் நான் ஒன்று என்பதனை இரண்டு என்று சொன்னதில்லை.

கடவுள் ஒன்றுதான், ஒன்றே ஒன்றுதான் என்பதை எங்கும் மறுக்கவே இல்லை. ஆனால், அவனது வெளிப்பாடு மற்ற உருவங்களில் உணரப்பட்டு உயர்த்திப் பேசப்படுகிறது, போற்றப்படுகிறது. மெய்ஞான ரீதியிலாக எண்களைக் குறிப்பது, அவற்றின் உள்ளடங்கியுள்ள தத்துவங்களை விளக்குவது முதலியன வேறானவை. ஒரு குறிப்பிட்ட மதத்தின் இறையியல், பேரண்டவியல், தத்துவம், மெய்ஞானம் முதலியவற்றில் அத்தகைய கூறுகள், பாரம்பரியங்கள் இருந்தால் தான், அத்தகைய சித்தாந்தங்கள் ஏற்புடையதாக இருக்கும். பாரஸீக சூஃபித்துவத்தில் அத்தகைய பாரம்பரியம் உள்ளதால், உமர் கய்யாம் பாடல்களில் அவை வெளிப்படுகின்றன எனலாம். அவற்றைப் புரிந்து கொள்ள அந்த பரிபாசையை அறிந்து கொள்ள வேண்டியதுள்ளது.

## நிஷாப்பூர்-கீழக்கரை தொடர்பு -சித்தர்-சூஃபி தொடர்புகள்

தென்னகத்திற்கும் குறிப்பாக தமிழகத்திற்கும் இஸ்லாம் உலகத்திற்கும் உள்ள தொடர்புகள் சித்தர்-சூஃபி உரையாடல்களில் காணப்படுகின்றன. ராமதேவர்-யாக்கோபு இணைப்பு தமிழகத்தை இஸ்லாம் தோன்றிய காலத்திலேயே அரேபிய நாட்டுடன் இணைக்கிறது. இப்னுபத்தூதா 1344ல் இலங்கையிலிருந்து, மதுரைக்கு வந்து கியாசுத்தீன் சுல்தானைச் சந்தித்தபோது கூறும் விஷயங்களில், ஒன்று நோக்கத்தக்கது, ''அப்பட்டணத்தில் (பத்தன்) நிஷாப்பூரிலிருந்து வந்த ஷைகு முகம்மது மஜ்தூபி அவர்களைச் சந்தித்தேன். அவர் சித்தம் தெளியாத நிலையில் இருக்கிற பக்கீர்கள் குழுவினைச் சேர்ந்தவர். அவர் திருமுடி விரிந்து தோள்வரை தொங்கிக் கொண்டிருக்கும். அவருடன் ஒரு சிங்கம் இருந்தது. அதை நன்கு வசப்படுத்தி சாதுவாக உறைந்து உணவு அருந்தும். அவருடன் முப்பது தர்வேசுகள் இருந்தனர். அவர்களுள் ஒருவர் மானை வளர்த்து வந்தார். சிங்கமும் மானும் ஒரே இடத்தில் இருந்தாலும் அன்பாகப் பழகி வந்தன''. இங்கு பத்தன் என்பது கீழக்கரைப்பட்டினத்தைக் குறிக்கும் என்று முகம்மது ஹுஸைன் நயினார் குறிப்பிடுகின்றார். ஆகவே, உமர் கய்யாம் பிறந்த ஊரான நிஷாப்பூருக்கும் கீழக்கரைக்கும் 14ம் நூற்றாண்டில் தொடர்பு இருந்தது இயற்கையே! அதுமட்டுமல்லாது, அத்தகைய சூரிஃபி, தர்வேஷ் கூட்டங்கள் தமிழகத்தில் இருந்தது குறிப்பிடத்தக்கது. இந்த நிஷாப்பூர்-கீழக்கரை தொடர்பு முன்பு இறையியல் ரீதியாக சித்தர்-சூஃபி பாலமாகத்தான் இருந்தது. பிறகு என்னவாயிற்று என்பது ஆராயத்தக்கது.

## முடிபுகள்

மத்தியதரைக்கடல் / மத்திய கிழக்கு நாடுகளிலுள்ள பல கவிஞர்கள், புலவர்கள் மற்றவர்கள் அங்கிருந்த சூழ்நிலைகளில் இருக்கும்போது, அத்தகைய தத்துவ எண்ணங்களைப் பெற்றிருக்க முடியாது என்றபட்சத்தில், அவை எங்கிருந்து வந்திருக்கக் கூடும் என்பது ஆய்வுக்குறியதாகிறது. மனத்தில் எண்ணுவது, கருத்துருவாக்கம் கொள்வது, சித்தாந்தங்களாக பரிணமிப்பது, பிறகு அவை தத்துவமாக வெளிப்படுவது என்பதில் பல கலாச்சார, பாரம்பரிய, பண்பாட்டு, நாகரிக காரணிகள் உள்ளடங்கியுள்ளன. அவ்வாறு நுண்ணியதாக நோக்கும்போது, ஒன்று பழங்கால ஈரானிய அல்லது இந்திய பாரம்பரியங்களினின்றுதான் அவைப் பெற்றிருக்க வாய்ப்புள்ளது. இந்தோ-ஈரானிய வல்லுனர்கள் வேதங்கள் மற்றும் ஜென்ட்-அவஸ்தா நூல்களிலுள்ள பல ஒற்றுமைகளைக் கண்டு, அவ்விரண்டுமே ஒரே மூலத்திலிருந்து வந்திருக்கவேண்டும் என்று எடுத்துக்காட்டியுள்ளனர். ஈரானியர்களுடைய அக்னி வழிபாடு முதலிய பழக்கங்கள், சடங்குகள் இந்தியர்களை ஒத்து இருக்கின்றன. நான்கடி கவிதைகள் என்ற பழக்கமே இந்தியாவினுடையது எனலாம். ஏனெனில், பெரும்பாலான இந்திய இலக்கியங்கள் இரண்டு அல்லது நான்கு வரிகளைக் கொண்டுள்ளக் கவிதைகள்/ பாடல்கள் தாம். தமிழகத்தில் 'நாலடியார்' என்ற நூல் இருந்தது மட்டுமன்றி, வெண்பா என்ற பாடல் முறையும் இருந்து வருகின்றது.

பல இத்தகைய நான்கடி பாக்கள், இஸ்லாத்திற்கு புறம்பாக அல்லது ஒவ்வாததாக உள்ளதாகக் கருதுகிறார்கள். முன்னமே விளக்கியபடி, அவருடைய சில கருத்துகளைக் கொண்டு, அவர் ஒரு சுதந்திர சிந்தனையாளர் என்றெல்லாம் சொல்லுவோர் உண்டு என்பதையும் பார்த்தோம். உமர் கய்யாம் ஒருவேளை தனது கருத்துகள் அனைவரும் அறிந்து கொள்ள விரும்பவில்லை என்பதால், அவ்வாறு மறைத்து பரிபாஷையில் சொல்லியிருக்கலாம்.

...நேரத்தில், அவர் தொழுகை புரிந்து, ஹஜ் பயணம் மேற்கொண்டு, இமாமாக இருந்து, ...ண்டவனுடைய படைப்பைப் போற்றி வாழ்ந்து வந்த ஒரு முஸ்லிமாகத் தான் ...த்தரிக்கப்படுகிறார்.

மது-மாது என்றெல்லாம் தனது பாடல்களில் சொல்லியிருப்பதெல்லாம், உருவகமாகத் ...ன் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சிலர் எடுத்துக்காட்டியுள்ளனர். இருப்பினும் ...த்தகைய கருத்துகளை முன்னம் அங்கிருந்த புலவர்கள் எவரும் எடுத்தாண்டிருக்கவில்லை ...று சொல்ல முடியாது.

உமர் கய்யாமின் எடுத்துக்காட்டப்பட்ட முரண்பாடான, எதிர்-புதிரான, வித்தியாசமான ...டல்களை ஆராய்ந்தவர்களுக்கு, அவற்றை இயற்றியவர் ஒருவரா அல்லது பலரா என்ற ...ந்தேகமும் எழுந்துள்ளது. எப்படி ஒரு மனிதர் பல குணாதிசயங்களைக் கொண்டிருக்க ...டியும் என்ற கேள்வியினையும் எழுப்பினர். அவர் ஒரு சுதந்திர சிந்தனையாளர், ...பிக்கையற்றவர், நாத்திகவாதி, சூன்யவாதி, போலித்தனமானவர், அவதூறு-பேசுபவர், ...ரஸீக-எகிபியூரியன், பாரஸீக - அபு-ல-ஆல, பாரஸீக - வோல்டயர், பாரஸீக-ஹைன் ...ன்றெல்லாம் ஒருபுறமும், அவர் ஒரு மெய்ஞானி, ஆசாரமான முஸல்மான், உண்மையான ...றுவஞானி, நல்ல இயற்கை-நேசி என்றெல்லாம் மறுபுறமும் சித்தரிக்கப்படுகின்றார்.

அந்த நான்கடி பாடல்களில் உள்ள கருப்பொருளைக் கொண்டு, கீழ்காணும் ...ந்தியக்கூறுகளை பெறலாம்:

உமர் கய்யாம் என்ற பெயரில் முதன் முதலில் ஒரு மனிதர் இருக்க வேண்டும்.

அவர் பலத்துறைகளில் வல்லுனராக, வானியல், கணிதம், தத்துவம், மெய்ஞானம், இசை, கவிதை முதலியன இருந்திருந்தமையால் அத்தகைய பல - மனித குணாதி சயங்களை வெளிப்படுத்துகின்றார்.

அவர் பெயர் அந்தளவிற்கு பிரபலமாக இருந்தமையால், பலதரப்பட்ட நான்கடி பாடல்களை இயற்றி, பிறகு வந்த பல கவிஞர்கள், அவரின் பெயரில் பரப்பியிருக்கலாம்.

உமர் கய்யாமிற்கு முன்னமே அத்தகைய நான்கு வரி பாடல்கள் புனையும் வழக்கம் இருந்திருந்தது.

ஆகவே, ஒன்றிற்கு மேலாக 'உமர் கய்யாம்' இருந்தது தெரிகிறது.

எல்லாப் பாடல்களிலும் தவறாமல் இருக்கும் தத்துவம் மற்றும் மெய்ஞான விஷயங் ...ளக் கொண்டு 'கய்யாமின் கவிதைகளை' அடையாளங் கொள்ளலாம். சூஃபிக்கள் பலரும் ...த்தகைய நான்குவரி பாடல்களை தமது தத்துவம், மெய்ஞானம் முதலியவற்றை ...ரண்டவியல், படைப்பியல், இறையியல் முதலிய எண்ணங்களில் பிரதிபலிக்கச் ...ய்துள்ளனர். அதற்கான பரிபாசை, உருவகங்கள், சின்னங்கள் முதலியவற்றையும் ...வாக்கினர். இரண்டு-நன்கு வரிகளில் சாதாரணமாக மக்களுக்குப் பிடிக்கும் வகையில், ...பலமான வார்த்தைகளை உபயோகித்தால், இசைத்தாளங்களுக்கு ஏற்ப அவற்றை பாடவும் ...ய்யலாம். லாலெ பக்தியார் அத்தகைய மெய்ஞான அனுபவங்கள் பல உருவங்கள், ...ருவகங்களுடன் கவிதையாக வடிக்கும்போது, அதிலுள்ள குறியீடுகள் பல இஸ்லாத்திற்கு ...த்தைய பாரம்பரியங்களினின்று பெற்றுள்ளதை நன்றாக அறியலாம். மது, கோப்பை, ...ப்பை ஏந்துகிறவன்(ள்), மதுசாலை முதலியன இஸ்லாமிற்கு ஒவ்வாதது. ஆனால்,

சூஃபிக்கள் அவற்றை ஆன்மீக வடிவில், உயர்ந்த மெய்ஞான நிலையில் ஆழ்ந்த பொருள் பதித்து தந்துள்ளனர்.

இப்பொழுது அத்தகையஒவ்வாத வார்த்தைகள் மற்றும் சொற்றொடர்களைப் பார்ப்போம்:

## மது (ஸராப்)

ஆனந்தத்தின் உச்சகட்டத்தின், ஒரு சூஃபி அஅல்லது அதிக பக்தி கொண்ட அடியவன் அடையும் நிலையை பெற்று, பரவசமாகி ஆண்டவனுடன் சேரும் தன்மையை அடையாளமாகக் காட்டுகிறது. மது / பக்தி ஒரு கிரியா-ஊக்கியாக செயல்பட்டு ஆன்மீக தர்சனம் மற்றும் சூஃபி மெய்ஞானியின் ஆத்மா இவற்றை இணைக்கும் சக்தியாக உள்ளது.

## கோப்பை ஏந்துகிறவள் / மது தருகின்றவள் (சகி / சினேகிதி)

மது அருந்துகின்றவன் கவனம் மதுவிலும், இந்த 'சகி'யிலும் இருக்கும். அவள் காதல் மற்றும் அன்பு கலந்த பக்தியை கோப்பையில் எடுத்து வருகின்றாள் 'ஸ்யக்' அந்த தெய்வீக ஞானத்தைப் பருக வழிகாட்டுகிறான்.

## கொடி / திராட்சைக் கொடி (காபாடி)

கடவுளைத் தேடி அலையும் ஒரு பிரயாணி.

## மதுசாலை (மாய்கனேஹ் / கர்பத்)

இது மெய்ஞானியின் இதயமாம், காதல் உள்ள இடம், பிரயாணியின் இதயத்தை விரிவடையச் செய்யும் காதல் என்பனவற்றுடன் அடையாளங் காட்டப்படுகிறது. மது விற்பவன், காம்மர், தூதுவன் அல்லது குருவாகிறான். மதுசாலைகளில் எப்பொழுதும் இருப்பவன் தன்னலம் அற்றவனாகவும் எல்லோராலும் ஏற்கப்பட்டவனாகவும் இருக்கிறான். கடவுளைத் தேடி அலையும் பிரயாணிற்கு கடைசியாக சென்று அடையும் இடம் அந்த மதுசாலைதான்.

## போதை தரும் பொருட்கள் (மஸ்தன்)

அவர்கள் எல்லாம் கடவுளின் காதலர்கள், சூஃபிக்கள் மற்றும் மெய்ஞானிகள். இருத்துவ கடலில் மூழ்கியுள்ளவர்கள். உலகத்தின் மர்மங்களைப் பற்றி அறிந்தவர்கள். ஆயினும், அதன் அழிவை அறியாதவர்கள். அவர்கள் தாங்கள் மிகவும் விரும்புகின்ற கடவுளின் தரிசனத்தைப் பெறவிழைகின்றவர்களாக இருப்பினும், இருக்கின்ற உலகத்தில் அத்தகையது இல்லை என்பர்.

## மது-ஜாடி (சபு / கும்)

ஒவ்வொரு பிரயாணியும், இறைத்தேடலில் குடிக்க விரும்பும் ஞானமாகிய 'தெய்வீகமான காதல்'.

பாட்டு

கைகளை தட்டி தனியாகவோ அல்லது குழுவாகவோ, மற்றும் சீராக பேரானந்தத்துடன் ஆடவும் செய்கின்ற வெளிப்பாடு.

பாடுகின்றவன்

கடவுளை அலைந்து தேடுகின்றவன், விருப்பமான பாடகன். எப்பொழுதும் இறைவனையே புகழ்ந்து பாடுகின்றவன்.

## ஆட்டம் (தர்விஸ்)

பாடல்களுடன் ஆடலும் இருப்பது இயல்பாகிறது. அது 'தர்விஸ்' என்ற குழுக்களின் சுழலும் நடனங்களில் வெளிப்படுகிறது. சூஃபிக்களின் 'ஞானநடனமும்' பிரசித்தி பெற்றதே.

## முத்தம், இதழ் (லப்), ரோஜாக்கள் (உஸ்) முதலியன

இவையெல்லாம் கடவுளின் அனுகிரகத்தைக் குறிப்பது. அதாவது இறை-உணர்வு, ஆண்டவனின் ஸ்பரிசம், இறைவனின் தரிசனம், இறைவனோடு சேருதல், பேரானந்த நிலையை அடைவது முதலிய நிலைகளைக் குறிக்கின்றன.

## மச்சம் (கல்)

உண்மையான இறைக்கூடுதலின் சின்னம், அது எப்பொழுதும் மறைக்கப்படுதலால், மறைந்திருப்பதால், கருப்பாக இருக்கிறது.

ஏ.ஜே. ஆர்பெர்ரி கூறுவதாவது, பாடல்களில் உள்ள உருவகங்களை அறிந்து, புரிந்து கொள்ள வேண்டும், ''இல்லையென்றால், அதன் பிம்பங்கள், போலிகள் மதத்தின் மதிப்பை மறைத்து, வியர்த்தமாக்கி விடுகின்றன''. மற்றும் இதுபோன்ற ஒரு அட்டவணையை 17ம் நூற்றாண்டைச் சேர்ந்த மஷின் ஃபைத் க ஷானி என்பவரால் எழுதப்பட்ட 'ரிஸாலா-யல்-மிஸ்வக்' என்ற குறும்புத்தகத்தினை ஆதாரமாகக் கொடுக்கிறார். அவர் ஆசாரமான பண்டிதர்கள், சூஃபிக்களை அதிகமாக விமர்சனம் செய்தபோது, அவர்களை ஆதரித்த அந்த புத்தகத்தை வெளியிட்டார்.

இந்த குறியீடுகள் எல்லாம், பக்தி மார்க்கத்தில் கடைபிடிக்க வேண்டிய முறைகளை ஒத்துள்ளன:

1. ஸ்ரவனம் : கடவுளை மனதால் நினைப்பது
2. கீர்த்தனம் : பாட்டுப் பாடி வணங்குவது
3. ஸ்மரணம் : கடவுள் பெயரை விடாமல் சொல்லுவது
4. பாதசேவனம் : காலில் விழுந்து வணங்குவது
5. அர்ச்சனாம் : பூஜை செய்து ஆராதிப்பது
6. வந்தனம் : வணங்கி மரியாதை செய்வது
7. தாஸ்யம் : அடிமை சேவை செய்வது

8. சக்யம் : தோழி மாதிரி நெருங்கி சேவை செய்வது
9. ஆத்மநிவேதனம் : மனதிற்கு திருப்தியாக எல்லாவற்றையும் கொடுத்து உபசரிப்பது.

ஆகவே, அப்பாடல்களில் ஆன்மீகம்தான் மற்றவற்றைவிட தலையோங்கி சிறந்து நிற்கின்றது என்றால் மிகையாகாது. ஆன்மீகம் உள்ள ஒருவரால் தான் அத்தகைய பாடல்களை இயற்ற முடியும். ஆகவே, உமர் கய்யாமின் நான்கடி பாடல்களில் இந்திய தத்துவம் மறைந்துள்ளது என்றால் மிகையாகாது. இந்திய-ஈரானின் பழங்கால தொடர்பு அதை உறுதி செய்கின்றது.

## ஆதாரங்கள்:

1. Edward Fitzzerald, 'Rubaiyat of Omarkhayyam', Thackartco, Bombay, 1944.
2. Harmsworth Encyclopedia, Vol.IV, London, 1909
3. Raiph Groves, Variants in Khayyamic Poetry, Indo-Iranica, Vol. 46, 1993
4. Lousia Start Costelln, The Rose Garden of Persion, Giblings & Co, London, 1911.
5. Hasan Jandi, Persian Literary Influence of English Litirature, Iron Society, Calcutta, 1983
6. Edward G. Brown, A. Literary History of Pensia, T. Fisher, London, 1906.
7. Arthur J. Arberry, Omar Khayyam, John Murray, London, 1952.
8. Lalh Bakhtiar, Sufi Expressions of the Mystic Guest, Thames and Hudson, Singapore, 1979
9. Thomas Wright, Life of Edward Fitz-Gerald, London, 1904.
10. O.B.S. Chobey, Traces of Indian Philosophy in Persian Poetry, Idarah - I - Adabiyat, NewDelhi, 1985
11. E.D. Ross, Al-Muzaffariye: Containing a Recent Contribution to the study of Omar Khayyam, Journal of Royal Asiatic Society, 1898.